பகவத் பாதை
sri Bagavath Mission
Flow with the Flow
Bagavath Path
இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு
28-02-2014

# வெறுமையும் வேலையும்

(கொஞ்ச நாட்களுக்கு முன்பு நமது பகவத் பாதையில் பயணிக்கும் நமது நண்பர் ஒருவரிடம் இருந்து ஓர் அழைப்பு வந்தது. அவர் தன் பிரச்சினையை கூறி அதற்கான தீர்வு கேட்டார். அந்த உரையாடலின் முடிவில் நல்ல தெளிவும் அடைந்தார். பிறகு அவர் இதுபோன்ற பிரச்சினை பலருக்கும் இருப்பதால் இதை நமது பாதையில் வெளியிட்டால் அனைவருக்கும் பயனாக இருக்கும் எனக் கேட்டுக்கொண்டார். எனவே அவருடன் நடந்த உரையாடலை உங்கள் அனைவருடனும் பகிர்ந்து கொள்கிறோம்.)

நண்பர் : ஒரு 15 நாட்களாக ரொம்ப வெறுமையாக உணருகிறேன். எல்லாவற்றிலும் வெறுமையாக உணர்கிறேன். முதலில் பகவத் ஐயாவின் கருத்துகளை உணர்ந்து புரிதல் ஏற்பட்ட போது ஒரு சந்தோஷம் ஏற்பட்டதாக இருந்தது. தேடியது கிடைத்தது என்ற திருப்தியும் இருந்தது.

சர : அதாவது ஒரு நிறைவும் திருப்தியும் இருந்தது இல்லையா?

நண்பர் : ஆமாம். ஆனாலும் இப்போதும் இந்த உணர்வு வேண்டாம், அந்த உணர்வு வேண்டாம் இதைத் தள்ளிவிட்டுவிடுவோம் என்ற பாதிப்பு எதுவும் கிடையாது. ஆனால் இப்போது அந்த வெறுமை உணர்வு நம்முடைய அன்றாட செயல்கள் செய்வதற்கே தடையாகவும், எந்த செயல் செய்வதற்கான ஊக்கமும் இல்லாத மிகவும் பலகீனமான உணர்வாக இருக்கிறது. இதனால் எந்த ஒரு செயல் செய்வதற்கும் ஊக்கம் இல்லாமல் இருக்கிறேன். முன்பு ஆன்மிகத்தில் ஒரு பிடிப்பு இருந்தது. இப்போது பகவத் ஐயாவிடம் வந்ததால் அதுவும் தகர்ந்தது. நான் ஆன்மிகவாதி என்ற திருப்தி முன்பு இருந்தது. இப்போது அதுவும் போய்விட்டது. ஆன்மிகமும் போய்விட்டது. வெளி உலகை நிர்வகிக்கும் திறமையும் சுத்தமாகப் போய்விட்டது.

காலை எழுந்தவுடன் ஒரு வெறுமை மட்டுமே உள்ளது. காலை எழுந்ததும் எந்த ஒரு செயல் செய்யவும் ஆர்வமில்லாமல், இங்கே போகவேண்டும், அங்கே வரவேண்டும் என்று எதுவும் இல்லாமல் ஒரு வெறுமை மட்டுமே உள்ளது. முழுக்க முழுக்க வெறுமையே நிரம்பி இருக்கிறது. அதனால் என்ன ஆகிறது என்றால் நம்முடைய சம்பாதிக்கிற வாழ்க்கையையே அது முடக்கிப் போட்டுவிடுகிறது.

எங்கே நான் ஒரு மனநோயாளி ஆகிவிடுவேனோ என்ற பயம் கூட வருகிறது. என்னிடம் எதைச் செய்வதற்கும் ஒரு மனோதிடம் இல்லையே. மனோதிடம் இருந்தால்தானே புற வாழ்க்கையில் ஏதாவது ஜெயிக்க முடியும். ஏதாவது சாதிக்கவேண்டும், ஏதாவது சேர்க்கவேண்டும் என்ற இலட்சியம், வேட்கை என்று எதுவுமே இல்லாமல் போய்விட்டது. எந்தப் பிடிமானமும் இல்லாமல் போய்விட்டது. முன்பாவது சாப்பாடு விசயத்தில் அல்லது ஏதாவது ஒரு விசயத்திலாவது மனம் பிடிப்பை வைத்திருக்கும். அதை வைத்து அன்றாட வாழ்க்கை நகரும். இப்போது பார்த்தோம் என்றால் மனதிற்கு எந்த ஒரு பிடிப்பும் இல்லை. "சரி இந்த வெறுமை உணர்வு தானே தானாகவே நகர்ந்துவிடும். இதனுடன் போராட வேண்டாம்" என்று தான் இருக்கிறேன். ஆனால் நாளுக்கு நாள் வெறுமை அதிகமாக ஆகும் போது பயம் வருகிறது. ஒரு கட்டத்திற்குமேல் இது நம்மை ஏதாவது செய்துவிடுமோ என்ற பயம்கூட ஏற்படுகிறது.

இப்போதுகூட பார்த்தீர்களானால் சென்னைக்கு ஒரு வேலை விசயமாக வந்தேன். வந்த வேலை முடிந்துவிட்டது. ஆனால் அந்த வேலையை முழுமையாக செய்ய மனம் ஒத்து வர மறுக்கிறது. இடைவிடாது மனம் நம்மை (Criticize) குறைசொல்லிக்கொண்டே இருக்கிறது. "நீ சரியில்லை, உன்னுடைய இலக்கு (destination) சரியில்லை. நீ எப்பவும் இப்படிதான் Positive-வாக எதையும் உருவாக்கிக் கொள்ளமாட்டாய்" என்று குறைகூறிக்கொண்டே இருக்கிறது. முன்பாவது Positive, Negative என்று இருந்தது. தற்போது அய்யாவிடம் வந்ததால் Positive-வும் இல்லை Negative-வும் இல்லை எது வந்தாலும் சமமாக எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கூறிக்கொள்கிறோம். ஆனால் மனதில் Negative உணர்வு மட்டும் தானே வருகிறது. நம்மிடம் எந்தவிதமான Positive உணர்வும் வருவதில்லையே?

Negative உணர்வு மட்டும் தானே இருக்கிறது. நம்முடைய நண்பர்களைப் பார்த்தால் அவர்கள் எல்லாம் positive Approach பண்ணுகிறார்கள். அதனால் பொருளாதார ரீதியாகவும், மனோ ரீதியாகவும் Positive mind உடன் செயல்பட்டு நல்லாதானே இருக்கிறார்கள். ஆனால் நம்மிடம் என்ன இருக்கிறது என்று என்னுடைய மனமே என்னைக் கேள்வி கேட்கிறது. என்னுடைய மனதிற்கு எந்த பதிலும் கூறமுடியாமல் நான் வெறுமையாகத்தான் இருக்கிறேன். நான் வெறுமையாக இருப்பதால் எந்த பிரச்சினையும் எனக்கு இல்லை. என்ன பிரச்சனை என்றால் வெளி உலகம் என்று வரும்போது மனைவி, குடும்பம் என்று வரும்போது என்னுடைய வெறுமைத் தன்மையை வைத்து அவர்களுக்கு எந்தப் பதிலும் கூறமுடியவில்லை. இது மாதிரிதான் உணர்கிறேன்.

நான் Diploma Electronic படித்திருக்கிறேன். படித்து முடித்து 20 வருடம் ஆகியும் நான் எனது துறையில் ஈடுபடவில்லை. எனக்குத் திறமை போய்விட்டதாக உணர்கிறேன். காரணம் என்னவென்றால் ஆன்மிகம் என்று அலைந்துக்கொண்டே இருந்ததுதான். அதனால் 20 வருட இடைவெளியை நிரப்ப வேண்டியுள்ளது. ஐயாவிடம் வந்தபிறகு

ஆன்மிகம் என்று தனியாக எதுவும் தேவையில்லை, சரி இனி நம்முடைய துறையில் இறங்குவோம், முடிந்தவரை சம்பாதிப்போம் என்று வரும்போது கடந்த 20 வருடம் நம் துறை சம்பந்தப்பட்ட அறிவும், அனுபவமும் குறைவாக இருக்கிறது. அப்படிக் குறைவாக இருக்கும் அறிவையும், அனுபவத்தையும் தாண்டிப்போக, எனக்கு சக்தி குறைவாக இருக்கிறது. அதனால் புற வாழ்க்கை வாழ்வது என்பது ஒரு சவாலாகப் போய்விட்டது. என்னுடைய கடந்தகால நிகழ்வுகளை எடுத்துப்பார்த்தால் தோல்வியும் தாழ்வு மனப்பான்மையும் மட்டும் உள்ளது. இனி எப்படி இருக்குமோ நம்முடைய எதிர்காலம். இப்பவே 40 வயது ஆகிவிட்டது. இனிமேல் என்ன செய்ய போகிறோம் என்ற எதிர்காலப் பயம் மட்டுமே முழுவதுமாக இருக்கிறது. இது தான் என்னுடைய தற்போதைய நிலை.

சர : நீங்கள் positive approach என்பதற்காக ஏதாவது பயிற்சி முறைகளை மேற்கொண்டீர்களா?

நண்பர் : நான் சில காலத்திற்கு முன்பு Alpha Meditation என்ற தியான பயிற்சியை மேற்கொண்டுவந்தேன். பிறகு அதையும் சரியாகச் செய்யவில்லை. என்னுடைய நண்பர்கள் positive approach வகுப்பில் கலந்துகொண்டு பொருளாதார துறையில் நல்ல முன்னேற்றம் அடைந்து இருப்பதாகத் தெரிகிறது. அதனால் நானும் அப்படி போய் இருந்தால் சரியாக இருந்திருக்குமோ என்று நினைப்பதுண்டு. அவர்கள் போன பாதை சரியாக இருப்பதுபோல் தோன்றுகிறது.

சர : நாம் பகவத் ஐயா மூலம் மனதை பற்றி என்ன தெரிந்து கொள்கிறோம் என்றால், நமது மனதில் தாமாகத் தோன்றுகிற எண்ணங்களையோ, உணர்வுகளையோ எதிர்த்து நம்மால் ஒன்றுமே செய்யமுடியாது என்பதைப் புரிந்துகொள்வதுதான். இதுதான் நாம் புரிந்துகொள்ளவேண்டிய முக்கியமான விசயம். சரிதானே?

நண்பர் : ஆமாம்.

சர : என்னுடைய மனதில் ஏற்படுகிற எண்ணங்களையோ, உணர்வுகளையோ எதிர்த்து என்னால் எதுவுமே செய்யமுடியாது என்பதைப் புரிந்து கொள்வதே ஞானம். அப்படி இருக்கையில் உங்கள் மனதில் தோன்றுகின்ற Positive, Negative எண்ணங்களோ, உணர்வுகளோ, என்ன வேண்டுமானாலும் வரட்டும். அப்படி வருவதை எதிர்த்து செயல்படுகிறீர்களா? இதுதான் என் கேள்வி.

நண்பர் : இல்லை; எதிர்க்கவில்லை.

சர : அது எப்படி இருந்தாலும் நம்மால் ஒன்றும் செய்ய முடியாது என்பதை நாம் புரிந்து கொள்வதால் நாமாக அதை எதிர்த்து செயல்படுவதில்லை, அப்படித்தானே?

நண்பர் : ஆமாம்.

சர : நமக்கு முழுக்க, முழுக்க Negative எண்ணமாகக் கூட தோன்றட்டும். காலை முதல் இரவு வரை கூட முழுக்க Negative எண்ணமாகத் தோன்றட்டும், Negative உணர்வே வரட்டும். "நமக்கு 40 வயது ஆகிவிட்டது. இதுவரை நாம் எதுவும் சம்பாதிக்கவில்லை, கடந்த காலம் முழுவதையும் ஆன்மிகம், ஆன்மிகம் என்றே ஓட்டிவிட்டோம். மேலும் நம்முடைய கடந்தகால நிகழ்வுகள் எல்லாம் தோல்வியிலேயே முடிந்துவிட்டது" என திரும்பத் திரும்ப நம்மைத் தாக்குகிறது என்று வைத்துக்கொள்வோம். எத்தனை ஆயிரம் தடவை வேண்டுமானாலும் அது நம்மைத் தாக்கட்டும். திரும்பத் திரும்ப தாக்குகிறது என்றே வைத்துக்கொள்வோம்.

நண்பர் : ஆமாம் அப்படி தாக்குவதுதான் பிரச்சனையாக உள்ளது.

சர : நமது மனதின் கவனத்திற்கு வராதவரை நாம் எதிர்த்து போராடுவதில் எந்தத் தவறும் கிடையாது. ஒரு கட்டத்தில் நாமாகத் தான் அதை எதிர்த்துப் போராடிக்கொண்டு இருக்கிறோம் என்பது நமக்குத் தெரியவரும், இல்லையா? அப்படி தெரியும் போது நாம் எதிர்த்து போராடாமல் இருக்கலாமா இல்லையா?

நண்பர் : ஆமாம், தெரிந்த பிறகு போராடாமல் இருக்கலாம்.

சர : நமக்கு ஒரு எண்ணம் (thought) வருகிறது. நமக்கு தெரியாமல் (thinking)ஐ சிந்தித்தல் என்ற பெயரில் கொஞ்சம் நேரம் சிந்தித்துவிடுகிறோம். பிறகு ஒரு கட்டத்தில் "ச்சே என்னடா இதை பற்றி நாம் யோசித்துக் கொண்டு இருக்கிறோமே" என்று தோன்றுகிறதா, இல்லையா?

நண்பர் : ஆமாம்.

சர : அப்படித் தெரிந்தற்குப் பிறகும் நாமாக மேற்கொண்டு சிந்திக்க வேண்டுமா? இல்லை அப்படியே விட்டுவிடலாமா?

நண்பர் : அதன்பிறகு சிந்திக்காமல் விட்டுவிடுவதுதான் சரியாக இருக்கும்.

சர : சிந்திக்க வேண்டிய அவசியமில்லை. அங்கு நாமாக ஒன்றும் செய்யமுடியாது என்பதைப் புரிந்து கொண்டோம். ஏன் சிந்திக்காமல் இருக்கிறோம் என்றால் அது ஒரு பைத்தியகாரதனமான வெளிப்பாடு, அதை எதிர்த்து நாம் ஒன்றும் செய்யமுடியாது என்று புரிந்துகொள்வதால் தான் அதை எதிர்த்து போராடாமல் இருக்கிறோம். அது எதை வேண்டுமானாலும் காட்டும். நாம் அதை எந்தக் கேள்வியும் கேட்கமுடியாது. உதாரணமாக நம்முடைய இரத்த ஓட்டத்தையோ, நுரையீரல் செயல்பாட்டையோ, இதயத்தின் செயல்பாட்டையோ நாமாகக் கட்டுப்படுத்த முடியுமா? நமது கட்டளைகள் எதையும் அவைகள் தான் கேட்குமா?

நண்பர் : ஆமாம். கட்டுப்படுத்தவும் முடியாது, கட்டளை இடவும் முடியாது.

சர : உங்களின் எந்தக் கட்டளையையும் அது கேட்காது. இப்ப நான் சும்மா தான் உட்கார்ந்து இருக்கிறேன். நீ வேண்டும் என்றால் இப்போது நன்றாக சுத்திக்கொள் என்று இரத்த ஓட்டத்தையோ, சுவாசித்துக்கொள் என்று நுரையீரலையோ, துடித்துக்கொள் என்று இதயத்தையை கூறினால் அக இயக்கம் எதுவும் கேட்டுக்கொள்ளுமா?

நண்பர் : அது கேட்காது தான்.

சர : இது மாதிரிதான் நமக்கு ஏற்படுகிற எண்ணமும், உணர்வும்.

நண்பர் : ஆமாம். சரி தான்.

சர : அப்படி நமக்கு ஏற்படுகிற எண்ணத்தையும், உணர்வையும் நாம் ஏன் சரி பண்ணும் முயற்சியை எடுக்கவேண்டும். நமக்குத் தெரியாமல் முயற்சி எடுத்துவிட்டால் தப்பு கிடையாது. எனது மனதின் கவனத்திற்கு வராமல் நான் எதிர்த்து போராடினால் எந்தத் தவறும் கிடையாது. ஒரு கட்டத்தில் நாம் தான் எதிர்த்து போராடிக் கொண்டு இருக்கிறோம் என்பது நமக்கே நன்றாகத் தெரிகிறது இல்லையா, நமக்கு நன்றாகத் தெரியும் போது மட்டும் அதற்கு மேலாக நாமாக develop பண்ணாமல் அப்படியே விட்டுவிடலாமா?

நண்பர் : ஆமாம். அதை நம்மால் செய்யமுடியும்.

சர : நம்மால் செய்ய முடிவதே அது மட்டும் தான். நமக்கு தெரியும் போது அதற்கு மேலாக சிந்திக்காமல் விட்டுவிடலாம், அவ்வளவுதானே?

நண்பர் : அவ்வளவுதான்.

சர : எண்ணம் வருவதும் நமது கட்டுப்பாட்டில் இல்லை, நமது மனதின் கவனத்திற்கு வராமல் நாமாக கையில் எடுத்து சிந்திப்பதும் நமது கட்டுப்பாட்டில் இல்லை. ஏதோ ஒரு நிலையில் நாமாக தான் சிந்தித்து கொண்டு இருக்கிறோம் என்பது நமக்குத் தெரிகிறதா இல்லையா?

நண்பர் : தெரிகிறது.

சர : அதற்கு மேற்கொண்டு அதனோடு செயல்படுவதும் செயல்படாமல் இருப்பதும் மட்டும்தான் நம் கைவசம் இருக்கிறது. அதற்கு முந்தைய நிலை வரை நம் கைவசம் இல்லை. சரி தானே?

நண்பர் : அதற்கு முன்பு வரை நம் கைவசம் இல்லைதான்.

சர : ஒரு எண்ணம் வருகிறது, அதற்குத் தகுந்த மாதிரி நமது இயல்பில் உள்ள பதிவுகளுக்கு ஏற்ற மாதிரி சிந்திக்கத் தொடங்கிவிடுகிறோம். அதற்கு அப்புறம் ஒரு கட்டத்தில் நமக்கு விழிப்புணர்வு ஏற்பட்டு, என்ன நாமே இப்படி யோசித்துக்கொண்டு இருக்கிறோம் என்பது நமக்கே தெரிந்த பிறகு தான் "அடடா" என்று யோசிக்கிறோம். சரி தானே?

நண்பர் : சரி தான்.

சர : நமது கவனத்திற்கு வந்தபிறகு, அதற்கு மேற்கொண்டு மட்டும் நமக்குத் தேவையான சரியானச் செயலை செய்து கொள்ளலாம். தேவையில்லாத செயலுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் விட்டுவிடலாம் இல்லையா? Negative-வாக ஒரு (thought) எண்ணம் வருகிறது, எனக்கு தெரியாமல் 1 மணி நேரம் சிந்தித்துவிட்டேன். ஒரு கட்டத்தில் நானே "ச்சே" என்ன நாமாகத் தான் இப்படி சிந்தித்துக்கொண்டு இருக்கிறோம் என்பது எனக்கே தெரிந்துவிட்டது. அதற்குமேல் அதை நான் develop பண்ணாமல் விட்டுவிடலாம் இல்லையா?

நண்பர் : ஆமாம் விட்டுவிடலாம்.

சர : அதை அப்படியே விட்டுவிட்டு அந்த சூழ்நிலைக்கு என்ன சரியான செயல் செய்ய வேண்டுமோ அந்த செயலில் நாம் ஈடுபடலாம் இல்லையா?

நண்பர் : ஆமாம் ஈடுபடலாம்.

சர : செயலில் ஈடுபடுவதுதான் முக்கியம், இந்த எண்ணத்தையோ உணர்வையோ பேசிக்கொண்டு இருப்பதால் ஒன்றும் நடக்கபோவதில்லை.

நண்பர் : ஆமாம்.

சர : செயல் மட்டும் தான் இங்கு தேவை. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று யாருக்கும் தெரியாது. நீங்கள் என்ன செயல் செய்கிறீர்கள் என்பது எல்லோருக்கும் தெரியும்.

நண்பர் : ஆமாம், ஆமாம்....

சர : உங்களுக்கு என்ன மாதிரி எண்ணம் வருகிறது. என்ன மாதிரி உணர்வு ஏற்படுகிறது என்பது உங்களுக்கு மட்டும் தான் தெரியும். ஆனால் நீங்கள் யார் யாரிடம் எப்படியெல்லாம் நடந்துகொள்கிறீர்கள், என்ன என்னவெல்லாம் செய்கிறீர்கள் என்பது உங்களை சுற்றியுள்ள எல்லோருக்கும் தெரியும்.

நண்பர் : ஆமாம், தெரியும்.

சர : செயல் ஒன்றுதான் நம்மை மற்றவர்கள் எல்லோருடனும் இணைக்கிறது.

நண்பர் : ஆமாம்.

சர : ஆனால் எண்ணமும், உணர்வும் நமக்கு மட்டும் தெரிகிறது. மற்றவர்களுக்குத் தெரியாது.

நண்பர் : ஆமாம் தெரியாது.

சர : நமக்கு எப்போது நன்றாகத் தெரிகிறதோ, அப்போது புற வாழ்க்கைக்கான செயலுக்கு முக்கியத்துவம் கொடுக்கலாம் இல்லையா? நாம் எத்தனை வருடத்தை தவற விட்டு இருந்தாலும் தவறு இல்லை. இப்போது நம்மிடம் நமது துறை சம்பந்தப்பட்ட அறிவு என்ன இருக்கிறது அல்லது நமக்கு வேறு எந்தத் துறை ஒத்து வருகிறது என்று ஒரு கணக்கு வைத்திருப்போம் இல்லையா? அதில் இன்றைக்கு என்ன நவீன தொழில்நுட்பம் உள்ளது என்பதை தெரிந்து கொண்டு மேலும் அந்த துறையில் உள்ள வெற்றியாளர்களின் அணுகுமுறையையும் தெரிந்து கொண்டு பிறகு புறவாழ்க்கையில் செயல்படுத்திக் கொள்ளலாம் இல்லையா?

நண்பர் : ஆமாம், செயல்படுத்திக்கொள்ளலாம்.

சர : அகப்போராட்டத்தை எதிர்த்து ஒன்றுமே செய்யமுடியாது என்பதைப் புரிந்து இருக்கிறீர்கள். சரி தானே?

நண்பர் : ஆமாம்.

சர : அகப்போராட்டத்தை எதிர்த்து நம்மால் ஒன்றுமே செய்யமுடியாது என்பதைப் புரிந்துகொள்வது தான் ஞானம் என்று கூறிவருகிறோம். அது எப்படி வேண்டுமானாலும் இருந்துவிட்டு போகட்டும். கண்டு கொள்ளவேண்டிய அவசியமே கிடையாது. நம்முடைய முழு கவனமும் வெளிப்புற செயலில் மட்டும்தான். செயல் மட்டும் தான் முக்கியம். ஏன் என்றால் எண்ணமும், உணர்வும் நமக்கு மட்டும் தான் தெரியும், செயல் மட்டும் தான் நம்மை எல்லோரிடமும் இணைக்கும்.

நண்பர் : ஆமாம், ஆமாம்.

சர : நமக்குத் தேவை செயல் தானே தவிர, எண்ணத்திற்கும், உணர்விற்கும் முக்கியத்துவம் அளிக்கவேண்டிய அவசியம் கிடையாது. என்னுடைய கவனத்திற்கு வந்த பிறகு, நான் சிந்திக்க வேண்டியது செயல் மட்டும் தான். எண்ணத்திற்கோ உணர்விற்கோ முக்கியத்துவம் அளிக்கவேண்டியதில்லை. என்ன Negative எண்ணம் தோன்றினாலும் அதற்கு என்ன சரியானச் செயலை செய்யலாம் என்பதற்கு, அந்த Negative எண்ணத்தையே பயன்படுத்தி கொள்ளலாம்.

உதாரணமாக மாணவன் ஒருவனுக்கு இறுதித் தேர்வு வந்துவிட்டது என வைத்துக்கொள்வோம். நாம் இன்னும் சரியாகவே படிக்கவில்லை தோல்வி ஏற்பட்டுவிடுமோ என்ற Negative எண்ணம் வருகிறது. இங்கு தோல்வி ஏற்பட்டுவிடுமோ என்பது Negative எண்ணம், இந்த Negative எண்ணத்தை மாற்றி அமைக்க போராடுவதால் எந்த மாற்றமும் ஏற்படப் போவதில்லை.

நண்பர் : ஆமாம்.

சர : ஆனால் அதற்குப் பதிலாக நாம் என்ன செய்யலாம் என்றால் இனி தேர்வுக்கு இருக்கிற காலத்திற்குள் நம்மால் ஒழுங்காக என்ன படிக்க முடியுமோ அதைப் படிக்கலாம். அது ஒன்றுதான் இங்கு செயல்படுவதற்கான வாய்ப்பாக உள்ளது இல்லையா?

நண்பர் : அதற்கு வாய்ப்பு இருக்கிறது.

சர : "இப்ப எனக்கு 40 வயது ஆகிவிட்டது, 25 வயதிலிருந்து 40 வயது வரை கடந்த 15 வருடமாக ஆன்மிகம் என்ற பெயரில் எனது துறையில் சரியாகக் கவனம் செலுத்தாமல் விட்டுவிட்டேன்" என்று தோன்றுகிறது. அப்படித் தோன்றிய எண்ணத்தையோ, உணர்வையோ சரி பண்ண முடியுமா? அது திரும்பத் திரும்ப வருவதைத் தான் சரி பண்ணமுடியுமா என்ன?

நண்பர் : சரிபண்ணமுடியாது.

சர : "இவ்வளவு நாட்கள் கடந்துவிட்டது" என புலம்புவதை விட இனிமேல் ஒழுங்காக வேலையைப் பார்க்கும்போது, விட்டதை ஓர் அளவிற்குப் பிடிப்பதற்கான வாய்ப்பு உள்ளது. முடிந்த நம்முடைய பழைய எண்ணத்திற்கு நாம் ஒன்றும் பண்ணமுடியாது. அது முடிந்தது முடிந்தது தான். இனிமேல்

செய்கிற வேலையை ஒழுங்காக செய்யலாம் இல்லையா? வேலையை செய்வதற்கான வாய்ப்பு இருக்கிறது இல்லையா?

நண்பர் : இருக்கிறது சார். ஒரு விசயம், நான் ஒரு அளவிற்கு சிறப்பாக வேலை பார்க்கக்கூடிய திறமையான ஆள்தான். ஆனால் தாழ்வு மனப்பான்மை காரணமாக என்னுடைய திறமையை சரியாக வெளிப்படுத்த முடியவில்லை என்பது என்னுடைய பிரச்சினை என்று வைத்துக்கொள்ளுங்கள்.

சர : உங்களை நீங்களே குறைத்து மதிப்பிடுவது அப்படிதானே?

நண்பர் : ஆமாம். நிச்சயமாக, நிச்சயமாக பலமடங்கு குறைத்து மதிப்பிடுகிறேன். அதனாலே என்னுடைய செயல்களில் எனக்கே அழுத்தம் திருத்தம் இல்லாமல், என் செயல்மேல் எனக்கே சந்தேகப்படும்படியாக இருப்பதால், எந்தச் செயலிலும் வெற்றிபெற முடியாமல் போய்விடுகிறது. என்னுடைய தாழ்வு மனப்பான்மையோடு போராடி தாழ்வு மனப்பான்மையை மாற்றி அமைத்துக்கொண்டால் என்னுடைய செயல் நன்றாக அமையும் என நினைக்கிறேன். இப்பொழுது செயலில் நேரடியாக ஈடுபடுவதா? தாழ்வு மனப்பான்மையை மாற்றி அமைத்துக்கொண்டு செயலை மாற்றி பார்ப்போம் என்று முயற்சிப்பதா?

சர : தாழ்வு மனப்பான்மை என்பது ஒரு எண்ணம் தானே?

நண்பர் : ஆமாம்.

சர : நாம் ஒன்றையும் சரியாகச் செய்யமாட்டோம் என்று நம்மை நாமே முடிவு கட்டிக்கொள்வது எண்ணம் தானே?

நண்பர் : மிகவும் சரி. "எதையும் ஒழுங்காகச் செய்யமாட்டாய் கடைசியாக சொதப்பிதான் வைப்பாய். எதையும் முழுமையாக செய்யமாட்டாய். கடைசியாக சரி இல்லாமல் தான் நடக்கும்" என்று நமக்கு நாமே நினைத்துக்கொள்வது.

சர : நீங்களே உங்களை குறைத்து மதிப்பிடுவது அப்படிதானே?

நண்பர் : ஆமாம் அப்படித் தான்.

சர : இப்படி நீங்கள் எண்ணுவது எண்ணமா? இல்லை செயலா?

நண்பர் : இது செயல் கிடையாது, இது எனக்குள் ஏற்படும் எண்ணம் தான்.

சர : நீங்கள் ஒரு வேலையை செய்கிறீர்கள். உங்களுக்கு உள்ளே இருந்தே உங்களது எண்ணம் இப்படித்தான் சொல்கிறது, "எப்படியும் கடைசியாக சொதப்பிதான் வைக்கபோகிறாய்" என்று இதற்கு நாம் முக்கியத்துவம் தர வேண்டுமா, தரத்தேவையில்லையா?

நண்பர் : தரத்தேவையில்லை.

சர : இதற்கு கவனம் செலுத்துவதற்குப் பதிலாக இதை மாற்றியமைப்பதற்கான போராட்டத்திற்கு செலவான மனோ சக்தியை நாமாக சிந்தித்து செய்யக்கூடிய செயல் பக்கம் திருப்பினால் நம்முடைய வேலை இன்னும் ஒழுங்காகவும், சிறப்பாகவும் மாறும் இல்லையா?

நண்பர் : மாறும்.

சர : தாழ்வு மனப்பான்மையை நாம் ஒன்றுமே செய்யமுடியாது என்று தெரிந்துகொண்டோம். "நீ எப்போதும் சொதப்பிதான் வைப்பாய்" என்ற தாழ்வுமனப்பான்மை எண்ணம் தாமாகவே வருகிறது. அது நம் கைவசம் இல்லாதது. அதற்கு நாம் என்ன தான் செய்துவிடமுடியும். நீங்களாக விரும்பி இதைக் கொண்டு வரவில்லை. அப்படித் தானே?

நண்பர் : விரும்பி கொண்டு வரவில்லை தான். நம்முடைய பழைய செயல்களின் விளைவு அப்படி எடுத்துக்காட்டுகிறது.

சர : நம்முடைய விளைவுக்குத் தகுந்த மாதிரி பதிவுகளை மனம் எடுத்துக்காட்டுகிறது. அதற்கு நாம் என்ன செய்யலாம் என்றால் செயலை ஒரு தடவைக்கு இரண்டு முறை நாம் ஒழுங்காக செய்திருக்கிறோமா என்பதை சரிபார்க்கலாம். செயலை வேண்டுமானால் சரிபார்க்கலாம் இல்லையா?

நண்பர் : தாராளமாக அதைச் செய்யலாம்.

சர : உதாரணத்திற்கு நாம் இரண்டு பக்கம் எழுதுகிறோம் என்றால் அது சரியாக இருக்கிறதா என்பதை ஒரு முறைக்கு இரண்டுமுறை படித்துப்பார்ப்பது என்பது அந்த செயலை சரிபார்ப்பது தானே?

நண்பர் : ஆமாம்.

சர : உதாரணமாக ஒரு Electrician ஒரு EB Box-ல் Electric Wire-ஐ ஒரு பத்து இடத்தில் இணைப்பு கொடுத்த பிறகு, தான் Connection கொடுத்த 10 இடமும் சரி தானா, என்று முதலில் இருந்து அடுத்தடுத்த இடத்திற்கு சரியாக இணைப்பு கொடுத்திருக்கிறோமா என்பதை ஒருமுறைக்கு இருமுறை சரி பார்ப்பது என்பது செயலைச் சரிபார்ப்பது தானே? அப்படிச் சரிபார்க்கும்போது நமது மனம் ஆமாம் சரியாகத்தான் இணைப்பு கொடுத்து இருக்கிறோம் என்று செயலை மேலும் உறுதிபடுத்தும் இல்லையா? இந்த இடத்தில் இப்படி நாம் சரி பார்க்கும்போது தாழ்வு மனப்பான்மையின் வலிமை குறைந்து செயல்படும் தன்மையின் வலிமை அதிகம் அடைகிறது.

நண்பர் : இது ஒரு சரியான, நுணுக்கமான விசயம், இப்போது இருக்கிற என்னுடைய நடைமுறை வேலையுடன் ஒப்பிடும்போது மிகச் சரியாக வருகிறது.

சர : சரியாக வருகிறது தானே? நாம் என்ன பண்ணலாம் என்றால் நாம் கவனத்தில் இருக்கும் போது எல்லா எண்ணத்திற்கும், உணர்விற்கும் மதிப்பளிப்பதை முழுவதுமாக விட்டுவிட வேண்டும். அதற்கு மதிப்பளிக்க வேண்டாம். எவ்வளவு Negative வேண்டும் என்றாலும் காண்பிக்கட்டும். அதை கண்டுகொள்ளத் தேவையில்லை. அதை நீங்களாக கொண்டு வருவதில்லை. அதுவாக வருகிறது. உங்கள் இரத்த ஓட்டம், நுரையீரல் இயக்கம், இருதய ஓட்டம் செயல்படுகிற மாதிரி அது தானாகவே செயல்படுகிறது. நீங்களாக கொண்டு வரவில்லை. நீங்களாக தாழ்வு மனப்பான்மையை கொண்டுவரவில்லை. Negative-ஐ கொண்டு வரவில்லை. இது எதையும் நீங்கள் கொண்டு வரவில்லை. உங்களை அறியாமல் அதுவாகவே வெளியே வந்துகொண்டே இருக்கிறது. இதை தாங்க முடியாமல் போனதால் உங்களின் வேலையை சரியாகச் செய்ய முடியவில்லை.

நண்பர் : ஆமாம், அதேதான்.

சர : இந்த உணர்வு உங்களுக்குப் பிடிக்கவில்லை; அதனால் உங்களுடைய வேலையைச் சரியாகச் செய்யவில்லை. அப்படி சரியாக வேலை செய்யாதபோது விளைவு மட்டும் எப்படி நல்ல மாதிரி கிடைக்கும். ஒரு தேர்விற்கு நாம் ஓர் அளவிற்காவது படித்திருந்தால் 100 மார்க்குக்கு 80 வாங்கவில்லை என்றாலும் ஒரு 50-தாவது வாங்க முடியும். சரியாகவே படிக்காமல் எப்படி மார்க் வாங்கமுடியும்?

நண்பர் : அதற்கு வாய்ப்பே கிடையாது தான்.

சர : செயலை ஒரு தடவைக்கு இருதடவை சரிபார்த்து செய்யலாம். இப்படி மட்டும் தான் நம்மால் செயலைச் சரியாக செய்யமுடியும். இப்படி செய்வதால் கடந்த 15 வருட இடைவெளியை ஓர் அளவிற்கு சரி செய்யமுடியும். ஏன் எனில்

முதல் முறையாக நாம் புரிந்துகொண்ட போது நமக்கு ஒரு மன அமைதி ஏற்பட்டது. அடுத்தது "நீ மன அமைதி அடைந்துவிட்டாயா? அதுவே உன் வாழ்க்கைக்கு போதுமா?" என நமது மனதில் இருக்கும் ஒட்டு மொத்த பதிவுகளும் (தாழ்வு மனப்பான்மை) ஒன்றுகூடி நம்மை எதிர்க்கத் தொடங்குகிறது.

நண்பர் : ஆமாம்.

சர : 15, 20 வருடப் பதிவுகள் எல்லாம் ஒன்று சேர்ந்து இப்போது நம்மை எதிர்க்கத் தொடங்குகிறது. "இப்ப என்ன பண்ணுவே" என நம்மை கேட்கிறது.

நண்பர் : அது சரி.

சர : அதற்கு நாம் என்ன பண்ணலாம் என்றால் "நீங்கள் எத்தனை பேர் வந்தாலும் சரி, எத்தனை கோடி முறை வந்தாலும் சரி நீ எப்படி வந்தாலும் உன்னை நான் கண்டுகொள்வதாகவோ, உனக்குப் பதில் சொல்வதாகவோ இல்லை" என்று நமக்குள் இருந்து வருகின்ற எண்ணம் உணர்வுகளை முடித்துக் கொள்ளவேண்டும்.

நண்பர் : சரி.

சர : அதை சரி செய்யவே முடியாது. தீர்வு காணவே முடியாது. ஏன் எனில் அது ஒரு பைத்தியகாரதனமான வெளிப்பாடு.

நண்பர் : புரிகிறது.

சர : நீ ஒரு பைத்தியக்காரன் என்பது எனக்கு நன்றாக தெரியும். உன்னை என்ன செய்தும் தீர்வு பண்ண முடியாது என்பது எனக்கு நன்றாகவே தெரியும். பைத்தியக்காரனான உன்னைச் சரி பண்ணுவதைவிட எனக்கு எது தேவையோ அதை நோக்கிய எனது வேலையை செய்யத் தொடங்கினால் போதும்.

நண்பர் : மிகவும் சரி.

சர : ஏன் எனில் அது ஓர் பைத்தியக்காரத்தனமான வெளிப்பாடு, அதை ஒன்றுமே செய்ய முடியாது இல்லையா?

நண்பர் : ஆமாம், உண்மை.

சர : ஒரு பைத்தியகாரன் இப்படித்தான் நடந்துகொள்ளவேண்டும் என்ற விதிமுறை எதுவும் கிடையாது. அவன் எப்படி வேண்டுமானாலும் நடந்துகொள்வான். அதில் நல்ல பைத்தியக்காரன், கெட்ட பைத்தியக்காரன் என்று எதுவும் உண்டோ?

நண்பர் : எதுவும் கிடையாது.

சர : பைத்தியத்தை சரி பண்ணவேண்டியது ஒன்றும் இல்லை. நாம் சரி பண்ண வேண்டியது செயலில் தான் உள்ளது. செயல் மட்டும் தான் உள்ளது. செயலை ஒரு தடவைக்கு 2 தடவைகூட சரிபார்த்துப் பண்ணுவதில் தவறு கிடையாது. ஒரு வேலையை 2 தடவை சரி பார்க்கவேண்டுமா என நினைக்காதீர்கள். நீங்கள் திரும்பத்திரும்ப இப்படிச் செய்து பழகுவதினால் உங்களுக்கே ஒரு நுட்பமும் தானாகவே வந்துவிடும். உதாரணமாக எழுதிப் பழக்கம் இல்லாத நீங்கள் முதலில் ஒரு Note-ல் இரண்டு பக்கம் பார்த்து எழுதுகிறீர்கள். அதற்கு எடுத்துக்கொள்ளும் நேரத்தை குறித்துக்கொள்ளுங்கள். இப்படி தினமும் 2 பக்கம் என ஒரு 10 நாட்களுக்கு தொடர்ந்து எழுதுங்கள். 10 நாள் பயிற்சியில் 2 பக்கம் எழுதுவதற்கு ஆகும் நேரம், முதல் நாளில் எழுதிய நேரத்தைவிட மிகவும் குறைவாகவே இருக்கும் இல்லையா?

நண்பர் : நிச்சயமாக, நிச்சயமாக

சர : அப்படி என்றால் வேலையை எப்படித் திறமையாகச் செய்யமுடிகிறது? நாம் செயலுக்கு முக்கியதுவம் கொடுப்பதால் மனம், உடல், முதற்கொண்டு எல்லாமே ஒத்துழைப்பைக் கொடுத்து மட, மட என்று எழுத வைக்கிறது இல்லையா?

நண்பர் :ஆமாம்.

சர : நாம் நம்முடைய முழு ஆற்றலையும் செயல் பக்கம் திருப்பிவிட வேண்டும். ஒரே ஆற்றல் தான் அகத்திற்கும், புறத்திற்கும். இரண்டு ஆற்றல் கிடையாது. நாம் என்ன செய்துவிடுகிறோம் என்றால் நம்முடைய அகத்தை சரிசெய்யவே 80% ஆற்றலையும் செலவு செய்துவிடுகிறோம்.

நண்பர் : ஆமாம் சரிதான்.

சர : மீதம் இருக்கிற 10%, 20% ஆற்றலை மட்டும் செயலுக்குச் கொடுக்கும் போது அதில் பெரிய முன்னேற்றம் எதுவும் ஏற்படுவதில்லை.

நண்பர் : நிச்சயமாக.

சர : அகத்தை நாம் சரிபண்ணவே முடியாது என்கிற போதுதான் நாம் அதை deal பண்ணமாட்டோம். நமக்கு அங்கு எந்த வேலையும் கிடையாது தானே.

நண்பர் : ஆமாம்.

சர : அப்படி என்றால் அகத்தை சரி பண்ணுவதற்கு குறைந்த அளவு ஆற்றலே செலவாகும். எப்போது நம்முடைய மனதின் கவனத்திற்கு தெரிகிறதோ அப்போதே அதற்குச் செலவாகும் ஆற்றலும் குறைந்துவிடுகிறது.

நண்பர் : ஆமாம். அதற்கு மேல் deal பண்ணுவதே கிடையாது.

சர : அப்போது நமது ஆற்றல் முழுவதும் புறச்செயலுக்கே வந்துவிடும்

.நண்பர் : ஆமாம் சரி.

சர : நம்முடைய ஆற்றல் முழுவதும் நாமாக செய்யக்கூடிய செயலின் பக்கம் திரும்பும் போது நம்முடைய செயலில் ஒரு நேர்த்தியும் நிறைவும் இருக்குமா, இருக்காதா?

நண்பர் : முன்பைவிட நம்முடைய செயல் நிச்சயமாக பல மடங்கு நேர்த்தியாக இருக்கும்

சர : நேர்த்தியான செயலுக்கு No.1 Result கிடைக்காவிட்டாலும் சாதாரண Result-ஆவது வருமா வராதா?

நண்பர் : கண்டிப்பாக வரும்.

சர : நம்மால் அகத்தில் ஒன்றுமே செய்யமுடியாது. நமக்கு அகத்தில் தோன்றும் உணர்விற்கு அகத்திலேயே சரி பண்ண முடியாது. ஆனால் அப்படித் தோன்றிய உணர்விற்கு புறத்தில் செயல்மூலமாக என்ன செய்யமுடியுமோ அதை செய்வது ஒன்று தான் நமக்கு இருக்கிற வாய்ப்பு.

நண்பர் : ஆமாம்.

சர : மனதில் நாம் எந்த இடத்திற்கு முக்கியத்துவம் தர வேண்டும். எந்த இடத்திற்கு முக்கியத்துவம் தரக்கூடாது என்பதை புரிந்துகொள்வது தான் முக்கியமானது.

நண்பர் : ஆமாம். அதுதான் மிக முக்கியமானது.

சர : இப்போது எந்த இடத்தில் முக்கியத்துவம் தரனும், எந்த இடத்தில் தரக்கூடாது அதை மட்டும் சொல்லுங்கள்.

நண்பர் : இப்போதைய என்னுடைய சூழ்நிலைக்கு நான் பொருத்திப்பார்த்ததில், என் மனதின் பைத்தியக்கார தனமான வெளிப்பாட்டை கண்டுகொள்ளகூடாது. அதைக் கண்டுகொள்ளாமல் இனிமேல் என்னால் என்ன செய்யமுடியுமோ அந்தச் செயலில் மட்டும் கவனம் செலுத்தினால் போதும்.

சர : இருப்பது செயல் மட்டும்தான். வேறு எதுவுமே இல்லை. செயல் மட்டும் தான் நம்மை எல்லோரிடமும் இணைகிறது. செயல் இருந்தால்தான் எந்தக் காரியமும் நடக்கும். தொழில் நடக்கும், மற்றவர்களுக்கு உதவவும் முடியும். மற்றப்படி நீங்களாக உணர்வது உங்களுடைய எண்ணமும், உணர்வும் மட்டுமே. அது உங்களுடன் முடிந்து விடுகிறது. அது உங்களுக்கு மட்டுமே தெரிகிறது. மற்றவர்களுக்கு தெரியாது.

நண்பர் : ஆமாம், அது சரி.

சர : உங்களுடைய மனைவி, மகன், அப்பா, அம்மா, உறவினர்கள், நண்பர்கள் என்று யாருக்காக இருந்தாலும் செயல் மட்டும் தான் தேவையாக இருக்கிறது. உங்களுடைய

செயலைத் தான் விரும்புகிறார்களே தவிர உங்களுடைய எண்ணத்தையோ, உணர்வையோ ஒருபோதும் யாரும் விரும்பவில்லை.

நண்பர் : யாரும் விரும்பமாட்டார்கள். அது உண்மை தான்.

சர : "நீங்கள் எனக்கு இதைச் செய்து கொடுங்கள்" என்று தான் யாரும் கேட்பார்களே தவிர நீங்கள் எனக்காக இப்படி நினைத்துக்கொள்ளுங்கள் என்று யாரும் சொல்லமாட்டார்கள். சொல்லவே மாட்டார்கள். ஏன் என்றால் அதனால் எந்த பிரயோசனமும் இல்லை.

நண்பர் : நிச்சயம், நிச்சயம்.

சர : மனைவி இருக்காங்க, இதை கொஞ்சம் எனக்காக செய்து கொடுங்க என்றும், நண்பர்கள் இதை கொஞ்சம் செய்து கொடுங்கள் என்றும், அப்பா, அம்மா, தம்பி இதை கொஞ்சம் செய்து கொடுங்கள் என்றுதானே கேட்பார்கள். எனக்காக இப்படி நினைத்துக்கொள்ளுங்கள் என்று யாரும் கேட்பதில்லை தானே.

நண்பர்: ஆமாம் செய்து கொடுங்கள் என்றுதான் கேட்பார்கள்.

சர : நடைமுறையில் பார்த்தாலும் இதுதான் சரியாக வருகிறது. நாம் என்ன செய்துவிடுகிறோம், நினைத்துக்கொள் என்பதற்கு மட்டும் முக்கியத்துவம் கொடுத்துவிடுகிறோம். செயல் என்று செய்து கொடுப்பதற்கு நாம் வந்துவிடவேண்டும். அதுதான் முக்கியம்.

நண்பர் : ரொம்பச் சரியாக தெளிவாக ஒரு விசயத்தைச் சொல்லிட்டீங்க . எந்த விசயத்தில் எனக்குப் பிரச்சினையோ அதைச் சரியாக சுட்டிக்காட்டிட்டீங்க. அதை இன்றைய சூழ்நிலைக்குப் பொருத்தி பார்க்கும் போதும் சரியாகப் புரிகிறது.

சர : நடைமுறைக்கு ஒத்து வருகிறதா? நான் சொன்னேன் என்பதற்காக எந்த வகையிலும் ஏற்றுக்கொள்ளக்கூடாது. நான் சொன்ன விசயம் உங்கள் நடைமுறைக்கு பொருந்துகிறதா எனப் பார்க்கவேண்டும். நான் சொல்கிறேன் என்பதற்காக ஒத்துக்கொள்ளகூடாது. உங்களுடைய நடைமுறை வாழ்க்கையோடு பொருத்திப் பார்த்து முடிவு பண்ண வேண்டும். அதுதான் இங்கு நமக்குத் தேவை.

நண்பர் : தெளிவாக விளக்கம் கிடைத்துவிட்டது. இதுவரை இப்படி நான் நடந்துகொண்டு இருந்ததற்கு என்ன காரணம் என்பதும் புரிந்துவிட்டது. இனி நான் என்ன செய்யவேண்டும் என்பதும் சரியாகப் புரிந்துவிட்டது.

சர : இனி செய்ய வேண்டியதை, உங்களுடைய அறிவைப் பயன்படுத்தி என்ன செய்யமுடியுமோ அதைச் செய்ய வேண்டியதுதான்.

நண்பர் : ஆமாம், அது மட்டும் தான் முடியும். இருக்கிற அறிவை வைத்து என்ன செய்யமுடியுமோ அதைச் செய்ய வேண்டியது தான்.

சர : இப்படிச் செயல்படுவதினால் இன்றைக்கே 100% வெற்றியை எதிர்பார்க்காதீர்கள். முதலில் (-) இருந்து (+)க்கு வருகிறோம். பிறகு 40% வருகிறோம் அடுத்து வருடம் 50% ஆகும். 50% அடுத்து வருடம் 60% ஆகும். அதற்குமேல் உங்களை நீங்கள் பார்க்கத்தேவையில்லை. நீங்கள் போய்கொண்டிருப்பது சரியாக அடுத்தடுத்தற்கு தானாகவே கூட்டிச் சென்று விடும். நீங்கள் செய்து கொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டால் மட்டும் போதும்.

நண்பர் : கண்டிப்பாக.

சர : இப்படிச் செய்யச் செய்ய உங்களுடைய செயல்படும் தன்மைக்குத் தகுந்த மாதிரி நீங்களே உங்களின் செயலில் உயர்ந்து வருவீர்கள். செயலுக்கு முக்கியதுவம். அவ்வளவு தான். நல்ல செயல் எல்லோராலும் அங்கீகரிக்கப்படும்.

நண்பர் : நிச்சயமாக, நிச்சயமாக.

சர : நல்ல செயலுக்கு 100% Result கிடைக்கவில்லை என்றாலும் நல்ல Result ஆவது கிடைக்கும். இது நடக்கும் அவ்வளவு தான்.

நண்பர் : கண்டிப்பாக நடக்கும். முன்னாடி நான் நினைத்துக்கொண்டது என்னவென்றால் புரிதல் நடந்துவிட்டது என்பது உண்மை. அகத்தில் எந்த முயற்சியும் பண்ணவில்லை என்று தான் உங்களிடம் பேசும் வரை நினைத்துக்கொண்டு இருந்தேன். வெளியிலே போராட்டம் எதுவும் இல்லை. வெளிச் சூழ்நிலை இப்படிதான் இருக்கிறது. நாமும் போராடவில்லை. இப்படிதான் இருக்கும் என்ற உணர்வில் இருந்துவிட்டேன். எப்படியோ தேவையில்லாமல் அகத்திற்கு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறோம். ஏதோ ஓர்வகையில் பைத்தியக்காரனை சமாதானம் பண்ணும் முயற்சியில் இருந்திருக்கிறோம் என்பது புரிகிறது. பைத்தியகாரனிடம் எப்படியாவது சமாதானம் ஆகி "என்னை ஏற்றுக்கொள், நல்லபடியாக என்னை ஏற்றுக்கொள், என்னை positive ஆன ஆள் என்று என்னை ஏற்றுக்கொள்" என்று தேவையில்லாமல் சண்டைபோட்டு பைத்தியக்காரனை சமாதானம் பண்ணியிருக்கிறோம் என்பது புரிகிறது. அது என்றும் நடக்காத காரியம், அதை எப்படியும் நாம் சரி செய்து விடலாம் என்று நினைத்துக்கொண்டு இருந்துவிட்டேன். அதனால்தான் வெளிவேலை ரொம்பவே மோசமாகப் போய்விட்டது.

சர : நீங்கள் அவனை சரி பண்ணுவதற்கு எடுத்த முயற்சியே உங்களுடைய அதிகப்படியான ஆற்றலை எடுத்துக்கொண்டது. அதிகப்படியான ஆற்றலை எடுத்துக்கொண்டதால் உங்களுடைய செயலுக்கான சக்தி ரொம்பவே குறைந்துவிட்டது. குறைந்து போனதால் சரியான செயல் நடைபெறவில்லை. அதனால் நல்ல விளைவும் இல்லை.

நண்பர் : ஆமாம் விளைவு சரியாக வரவில்லை.

சர : விளைவு சரியாக வராததினால் இந்தப் பைத்தியக்காரன் மேலும் வலுபெறுகிறான். பைத்தியக்காரன் வலு ஆவதினால் அவன் நம் தாழ்வு மனப்பான்மையை அதிகரிக்கிறான். எனக்கு அப்பவே தெரியும் "நீ ஒரு வேலையும் சரியாக செய்யமாட்டாய் கடைசியாக சொதப்பிதான் வைப்பாய்" என்று நம்முடைய பழைய பதிவுகள் எல்லாம் ஒன்று சேர்ந்து வலுவாகி சேர்ந்து நம்மை மேலும் வலுவிழக்க செய்து விடுகிறான்.

நண்பர் : அந்த பைத்தியக்காரன் செய்யும் கிண்டல், கேலியை நம்மால் தாங்க முடியாது. நம்மை படாதபாடு படுத்திவிடுவான். நம்மை எங்கு குத்தினால் வலிக்கும் என்று அவனுக்கு நன்கு தெரியும்.

சர : அந்த பைத்தியக்காரன் தான் எப்போதும் நம்மைப் பார்த்துக்கொண்டே இருக்கிறான் இல்லையா?

நண்பர் : ஆமாம். ரொம்ப நன்றி. இப்போது முழுமையாக, தெளிவாகத்தான் இருக்கிறேன். அதில் எந்த சந்தேகமும் இல்லை. இதுதான் உண்மையான தெளிவு. Ok.

சர : புரிந்துகொண்ட நபராக நாம் இருந்தாலும் கூட நமது மனது சில நேரங்களில் போராட்டத்தில் மாட்டிக்கொள்ளும்போது புரிந்து கொண்ட யாருடனாவது பேசினால்தான் தெளிவு கிடைக்கும்.

நண்பர் : நிச்சயமாக.

சர : அப்படி நாம் ஒருவரிடம் பகிர்ந்துகொள்ளும்போது நம்மை சூழ்ந்திருக்கும் மேகம் எல்லாம் விலகி வானம் தெளிவாக தெரிவதுபோல் நமக்கு ஒரு தெளிவுநிலை கிடைக்கிறது. அவ்வளவு தான்.

நண்பர் : அது மாதிரி ஒரு தெளிவுநிலை இப்போது இருக்கிறது.

சர : நான் இதுவரை சொன்ன ஒரு விசயம் உங்களுக்கு நடைமுறையில் ஒத்துவருகிறது இல்லையா? இதுதான் மொத்த விசயம். இதற்குமேல் ஒன்றும் இல்லை. மேற்சொன்னது போல் தான் எல்லாவற்றிற்குமே. தோல்வி மனப்பான்மை, பயம், வெறுப்பு, வெறுமை, மரணபயம், Negative thought உணர்வு இப்படி எதை

வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள். அதுவும் ஏதோ ஒரு வகை எண்ணம் தானே. நம்மைப் பாதித்த வடிவத்தின் ஏதோ ஒரு பெயரில் கூறுகிறோம். அவ்வளவு தான். எத்தனை பெயரிட்டு அழைத்தாலும் பொருள் ஒன்று தான். ஒரே செயல்முறை அடிப்படையில் தான் நடைபெறுகிறது.

நண்பர் : ஆமாம் மிகவும் சரி.

சர : செயலுக்கு மட்டும் தான் முக்கியதுவம். செயல் மட்டும் தான் இருக்கிறது. அதை தவிர இந்த பைத்தியகாரன் எவ்வளவு தான் காட்டுகத்து கத்தினாலும் அதை கண்டுக்கொள்ள தேவையில்லை என்பதை முடிவு பண்ணிவிட்டால் போதும். இவன் ஒரு பைத்தியகாரன் அவ்வளவு தான். இவனை எதிர்த்து எந்த வேலையும் செய்யாதீர்கள். அவனை அப்படியே விட்டுவிட்டு செய்கிற வேலை பக்கம் திரும்பி கொள்ளலாம். அவனை விட்டு நகர்ந்து நமது செய்கிற வேலை பக்கம் போவோம். நம் வேலைக்கு நாம் எங்கே போக வேண்டுமோ அங்கே போவோம். நாம் அவனை ஏன் திரும்ப, திரும்ப பார்பானேன். அப்படி பார்ப்பதினால் தான் அவன் வலுவாகி நம்மை கேலி செய்கிறான். பிறகு நம்மையே மிரட்டுகிறான். நாமே நம்முடைய சக்தியை பாதிக்குமேல் அவனுக்கு கொடுத்துவிடுகிறோம்.

நண்பர் : உண்மை, உண்மை.

சர : நீங்கள் அதனால் தான் பல சிரமத்திற்கு உள்ளாகியதாக கூறுகிறீர்கள்.

நண்பர் : அந்த மாதிரி தோற்றத்தை ஏற்படுத்திவிட்டான்.

சர : அவனை கண்டுகொள்ளாமல் விட்டுவிட்டு வேலையின் பக்கம் நகர்ந்து போவதற்கு என்ன வேலையோ அதை பாருங்கள். செயல் பக்கம் வாங்க. அந்த பைத்தியக்காரன் எப்படியோ தொலைந்து போகட்டும்.

நண்பர் : கண்டிப்பாக.

சர : நீங்கள் வேண்டும் என்றால் ஒரே ஒரு வார்த்தை எழுதி வைத்துக்கொளளுங்கள். மனம் = பைத்தியக்காரத்தனமானது என்று குறித்து வைத்துக்கொள்ளுங்கள். உங்களுக்கு ரொம்ப குழப்பமாக இருக்கும் போது அந்த வாக்கியத்தை ஒருமுறை பார்த்துக்கொள்ளுங்கள். அதை பார்த்தவுடன் இந்த பைத்தியக்காரன் தான் நம்மை இந்த பாடுபடுத்தியிருக்கிறான் என்று புரிந்துக்கொண்ட வினாடி அவனை விட்டு வேலை பக்கம் திரும்பிவிடுவீர்கள்.

நண்பர் : கண்டிப்பாக இது ஒரு நல்ல புரிதல். இன்று காலை வரை நான் ஒரு மனநோயாளி ஆகிவிட்டேன் என்றே முடிவு பண்ணிவிட்டேன். பைத்தியகாரனே நமக்கு Certificate கொடுத்துவிட்டான். இது அந்த பைத்தியக்காரன் வேலை தான் என்று புரிந்தவுடன் அந்த பைத்தியக்காரனை காணவில்லை. ரொம்ப நன்றி, நீங்களும் இந்த மாதிரி நிகழ்வுகளை கடந்து தான் வந்து இருப்பீர்கள். அதனால் தான் இவ்வளவு தெளிவாக எடுத்து கூறுகிறீர்கள்.

சர : ஆமாம், நீங்கள் கூறிய படி அப்படியே தான் எனக்கும் நிகழ்ந்தது. ஒரு முறை, 2, 3 நாட்கள் முழுவதும் வெறுமையுடனும், எதுவும் பேச பிடிக்காமல் விரக்தியுடனும் இருக்கும்போது என் முகத்தையே கண்ணாடியில் கூட பார்க்கவில்லை. எதைக்கண்டாலும் வெறுப்பு. ஆபீஸ் போய் உட்காருவேன் மற்றவர்கள் என்ன பேசுகிறார்கள், என்ன செய்கிறார்கள் என எதுவும் கேட்கத் தோன்றாது. வீட்டிற்கு வந்தால் மனைவி கேட்பாள், "ஏன், என்ன ஆச்சு, ஏன் இப்படி இருக்கிறீர்கள்"என்று. மனைவியிடம் "தயவு செய்து என்னை எதுவும் கேட்காதே விட்டுவிடு நானே சரியான பிறகு உன்னிடம் பேசுகிறேன்" என்று கூறிவிடுவேன். மேலும் சரியாக சாப்பிடுவதற்குக்கூட மனம் இல்லாமல் ஏதோ கடமைக்கு கொஞ்சம் சாப்பிட்டுக் கொண்டும் இருந்தேன். 3-வது நாள் மாலை உடல்முழுவதும் நல்ல வலி, சரி இனி பகவத் ஐயாவிடம் எனக்கு இப்படி எல்லாம் இருக்கிறது இதற்கு என்ன செய்வது எனக் கேட்டேன். "ஆமாம் அது அப்படிதான் இருக்கும். அதற்கு தான் நாம் எதுவுமே செய்யவே முடியாது என்று கூறிவிட்டோமே" என்று வெகு சாதாரணமாக கூறினார். "அப்படி ஏற்படுவதற்கும் நாம் ஒன்றும் பண்ணமுடியாது பார்த்தீர்களா" என்று அவரது வழக்கமான பாணியில் கூறினார். அட ராமா என நினைத்துக்கொண்டு அடுத்த நாள் பாதியும் அன்று இரவு ஒரு அளவிற்கு normal க்கு வந்துவிட்டேன். நான் எங்கெங்கெல்லாம் அடி வாங்கினேனோ அதை உங்களுக்கு கூறும்போது அது இன்னும் கொஞ்சம் எளிமையாக உங்களுக்குப் புரிகிறது.

நண்பர் : நிச்சயமாக, நிச்சயமாக

சர : இப்படி ஏற்படுவது தான் நம்மை அடுத்த கட்டத்திற்கு கொண்டு சேர்க்கிறது. நாம் செயல் பக்கம் திரும்புவதற்காக ஏற்பட்டது தான் இந்த விரக்தி. ஒரு கடுமையான பாதிப்பு ஏற்பட்டால் தான் நாம் அதிலிருந்து வெளியேறுவோம்.

நண்பர் : ஆமாம் உண்மைதான். இதுவே ஒரு சாதாரண வெளிப்பாடு என்றால் நானே சமாளித்துக்கொண்டும் போய்கொண்டும் இருப்பேன். வாழ்க்கையையே உலுக்கிவிடுமோ என்ற பயம் வரும் போது தான் சரி என்று உங்களை எல்லாம் போனில் தொடர்பு கொண்டேன்.

சர : ஆமாம். இல்லை என்றால் நீங்கள் என்னிடம் பேச வேண்டிய அவசியமே இல்லை. நமக்குத் தெரியாதா பகவத் ஐயா கூறியது, நமக்கு தெரியாததா என்று தான் நினைத்திருப்பீர்கள்.

நண்பர் : ஆமாம். புத்தகம் படிக்கும் போது எல்லாம் பகவத் ஐயாவின் ஒரே விசயம்தான் எல்லா புத்தகத்திலும் என்று நினைப்பேன்.

சர : நான் எப்படி வெளியே வந்தேனோ அதைக் கூறும்போது, அது உங்களுக்கு இன்னும் கொஞ்சம் எளிமையாக புரிகிறது அவ்வளவுதான். இது முழுவதும் எனக்கு நிகழ்ந்தது தான். நமக்கு இப்படி ஏற்படுவது நாம் நன்றாக செயல் செய்வதற்காகதான் என்பது இப்போது தான் புரிகிறது.

நண்பர் : நமக்கு இருக்கிற விரக்தியை மாற்ற positive எண்ணமாக சிந்திப்பதோ அல்லது ஏதாவது ஒரு வகையில் மனதை திசை திருப்புவதோ எந்த பலனையும் அளிக்காதுதானே?

சர : மனதை திசை திருப்புவது என்பது தற்காலிகமாக நீங்களே உங்களிடம் இருந்து கொஞ்ச நேரத்திற்கு தப்பித்துக்கொள்வது. diversion நேரம் போன பிறகு விரக்தி மட்டும் தான் நிற்கும். நீங்கள் விரக்தியை மாற்ற எந்த வகையான diversion செய்தாலும் ஒரு மாற்றமும் நிகழாது. உதாரணமாக 3மணி நேரம் TV பார்த்தாலும்கூட கண்கள் தான் கபகப என எரியுமே தவிர பிறகும் நீங்கள் யதார்த்தமாக Bed-ல் வந்து படுக்கும்போதும் இந்த விரக்தி மட்டும் தான் உங்களை முழுவதுமாக ஆக்கிரமிக்கும். 3 மணிநேரம் TV பார்த்தாலும் எந்த ஒரு பிரயோஜனமும் இல்லை என்பது தான் உண்மை. அதனால் divert என்பது எந்த வகையிலும் உதவாது.

நண்பர் : நேருக்கு நேர் சந்திப்பதைத் தவிர வேறு எந்த வழியும் கிடையாது. என்ன சார், மனம் ஓர் பைத்தியம் என்பதைப் புரிந்து கொண்டு அதை எதிப்பதில் எந்தப்பயனும் இல்லை என்று முடித்துக் கொள்ள வேண்டும். அவ்வளவு தானே சார், ரொம்ப, ரொம்ப நன்றி.

(ஒரு வாரம் கழித்து நானே நண்பரை தொடர்பு கொண்டேன்.);

சர : எப்படி இருக்கிறீர்கள். எப்படி போகிறது? பரவாயில்லையா?

நண்பர் : நல்லாயிருக்கேன், ஆனால் அப்ப, அப்ப சிக்கல், தெளிவு என மாறி மாறி ஏற்படுகிறது. இன்னமும் கொஞ்சம் செயல்பக்கம் முக்கியத்துவம் கொடுக்கவேண்டியது இருக்கிறது.

இருக்கிறது. அதற்கு இந்த பைத்தியகாரன் முழுமையாக செயல்பட தடையாக இருக்கிறான்.

சர : மாற்றம் கொஞ்சம் கொஞ்சமாகத் தான் ஏற்படும். முன்பு இருந்த நிலைக்கு இப்போது பரவாயில்லை தானே

நண்பர் : எவ்வளவோ பரவாயில்லை. நல்ல முன்னேற்றத்தில் தான் போய்க்கொண்டு இருக்கிறேன். ஆனால் இன்னும் ஒரு சந்தேகம் இருக்கிறது. எனக்கு நன்கு தெரிந்தே சில தவறுகள் கட்டுப்படுத்தமுடியாமல் செய்து விடுகிறேன். இப்படி கட்டுப்படுத்தமுடியாமல் நடந்துவிடுவதால், நான் நீங்கள் கூறியதை சரியாக செயல்படுத்தவில்லையே என்ற குற்ற உணர்வு ஏற்படுகிறது.

சர : அதற்காகத் தான் உங்களுக்கு போன் பண்ணினேன். நீங்களாகக் கூப்பிட்டு "சார் முன்பைவிட பரவாயில்லை. ஆனால் இப்படி தெரிந்தே நடைபெறும் சில தவறான செயல்கள் என்னை மிகவும் சிரமபடுத்துகின்றன என்ன செய்வது" என்று கேட்பீர்கள் என எதிர்பார்த்தேன். ஆனால் நீங்கள் தான் கூப்பிடவில்லை.

நண்பர் : நான் கூப்பிடலாம் என்று தான் நினைத்து இருந்தேன். நான் இன்னும் நீங்கள் கூறியதை முழுமையாக செயல்படுத்தாமல் எப்படி திரும்ப அழைப்பது என எண்ணி தவிர்த்துவிட்டேன். மேலும் எனக்கு தவறு என்று நன்கு தெரிந்தே கட்டுப்படுத்த முடியாத செயலினால் ஏற்பட்ட குற்ற உணர்ச்சியை எப்படி போக்குவது என்று தெரியாமல் இருந்து வருகிறேன்.

சர : பொதுவாக நமக்கு எண்ணம், சிந்தனை, செயல் என்ற வரிசையில் தான் ஒரு செயல் நடைபெறுகிறது. சரி தானே?

நண்பர் : ஆமாம்.

சர : நமக்கு தாமாக ஏற்படும் எண்ணத்திற்கு நாமாக ஒன்றும் செய்யத்தேவையில்லை. நமது மனதின் கவனத்திற்கு வராமல் எண்ணத்தை எடுத்து எவ்வளவு நேரம் சிந்தித்தாலும் தவறு இல்லை என்று கூறிவிட்டோம். இதே போல் நமது கவனத்திற்கு வராமல் செயல் செய்வதற்கும் நாம் பொறுப்பு கிடையாது.

நண்பர் : எண்ணம் கட்டுப்பாட்டில் இல்லை. சிந்தனையும் மனதின் கவனத்திற்கு வராமல் சிந்தித்தால் தவறில்லை. செயலும் கவனத்திற்கு வராமல் செய்தால் தவறுமில்லை. ok தான். ஆனால் இங்கு என்னுடைய பிரச்சனையே எனக்கு தவறு என்று தெரிந்த பிறகும் கட்டுப்படுத்த முடியாமல் செய்யும் செயலை பற்றி நான் கேட்கிறேன்.

சர : உங்களுக்கு நன்கு தெரிந்தும் கட்டுப்படுத்த முடியாமல் செய்யும் தவறும் தவறு இல்லை. எப்படி என்றால் உங்களுக்கே தவறு என்று நன்றாக தெரிகிறது. ஆனால் உங்களால் கட்டுப்படுத்த முடியாமல் செய்துவிடுகிறீர்கள். உங்களது அறிவிற்கு நன்றாக தெரிகிறது. நீங்கள் செய்வது தவறு என்று, ஆனால் உங்களையும் மீறி அந்தத் தவறான செயல் நடந்துவிடுகிறது. அப்படி தானே.

நண்பர் : ஆமாம். அது தான் பிரச்சனை

சர : உங்களுக்குத் தெரிந்தே செய்யும் கட்டுப்படுத்த முடியாத செயலும் மனதின் கவனத்திற்கு வராமல் செய்யும் செயலாக எடுத்துக்கொள்ளவேண்டியது தான். அப்படி எடுத்துக்கொள்வதால் தான் அதிகமாக பாதிக்கின்ற செயலும் நாளடைவில் குறையத் தொடங்கும்.

நண்பர் : நமக்கு தெரிந்தே செய்யும் செயல் எப்படிக் குறையும்.

சர : உங்களால் கட்டுப்படுத்தவே முடியாமல் செய்யும் செயலும் மனதின் கவனத்திற்கு வராமல் செய்யும் செயலாக எடுத்துக்கொள்ளும் போது முதலில் குற்ற உணர்ச்சி குறைகிறது. பிறகு மறையத் தொடங்கும். பிறகு தவறான செயலுக்கு மறைமுக ஆதரவாகவும், தவறான செயலுக்கு தூண்டுதலாகவும் இருந்து வந்த குற்ற உணர்ச்சி இப்போது இல்லை. இதனால் தவறான செயலின் தேவைப்பாடு குறையத் தொடங்கும். பின்பு தவறான செயலின் எண்ணிக்கை நாளுக்கு நாள் குறையும். உதாரணமாக ஒரு மாதத்திற்கு 15 முறை நம்முடைய கட்டுப்பாட்டையும் மீறி நடைபெறுகிற எண்ணிக்கை கொஞ்சம், கொஞ்சமாக 14, 12, 10, 8, 6, 4, 2 எனக் குறையத் தொடங்கும். ஒரு காலகட்டத்திற்கு பிறகு அந்த செயலின் தேவைபாடு முழுவதுமாக குறையும். அதன்பிறகு அந்த செயலுக்கு ஆதாரமான சிந்தனையும் அதே வரிசையில் குறையத் தொடங்கும். சில காலங்களில் அதைப் பற்றிய பாதிப்பே இல்லாமல் போகும் நிலை உருவாகும்.

நண்பர் : ரொம்ப நன்றாகப் புரிகிறது. கட்டுப்படுத்த முடியாமல் தெரிந்தே செய்யும் எல்லாச் செயலுக்கும் இதே வழிமுறை அப்படிதானே?

சர : அப்படி தான். ஆனால் நாமாகத் திட்டம்போட்டு மட்டும் தவறு செய்துவிடக்கூடாது. நாமாக திட்டம் போட்டு தவறு செய்வது என்பது வேறு, நமது கட்டுபாட்டையும் மீறி தவறு செய்வது என்பது வேறு. திட்டமிட்டு செய்யாமல் கட்டுப்பாட்டை மீறி செய்யும் செயலுக்கு மட்டும் இது பொருந்தும். திட்டமிட்டு தவறு செய்வதற்கு இது பொருந்தாது.

நண்பர் : இன்னும் கொஞ்சம் விளக்கமாக கூறுங்கள்.

சர : திட்டமிட்டு தவறு செய்வது என்பது நாமே நமது அறிவை பயன்படுத்தி தவறு செய்வது ஆகும். ஆனால் நமது கட்டுப்பாட்டையும் மீறி தவறு செய்வது என்பது நமக்கே, நமது செயல் பிடிக்கவில்லை. எப்படியாவது இந்த செயலிலிருந்து விடுபடவேண்டும் என்றும் ஒரு நல்ல மாற்றத்தை உருவாக்க வேண்டும் என்றும் நினைப்பதாகும். இருந்தாலும் பழைய பழக்கத்தினால் தவிர்க்க முடியாமல் தவறு செய்து விடுகிறோம்.

நண்பர் : இது புரிதலுக்குப் பின் அடுத்த கட்டம்போல் தெரிகிறது.

சர : ஒரே புரிதல் தான். அதில் மாற்றம் இல்லை. அந்தப் புரிதல் நம்மிடம் செயல்படச் செயல்பட நாம் மாறிக்கொண்டே இருக்கிறோம். தினத்திற்கு தினம் நாம் sharp ஆகிகொண்டே போகிறோம்.

நண்பர் : சரி தான். அப்படிதான் தோன்றுகிறது.

சர : பகவத் ஐயாவின் மனதைப் பற்றிய புரிதல் முதலில் சாதாரணமாகத் தோன்றியது. அது நம்மிடம் செயல்படத் தொடங்கிய பிறகு அதை தவிர வேறு எதுவுமே இல்லை என்ற நிலைக்கு அது மாறுகிறது. பாரதியார் பாடலில் கூறியபடி "அக்கினிக்குஞ்சு ஒன்று கண்டேன் அதை அங்கு ஒரு காட்டிலோர் பொந்திடை வைத்தேன்; வெந்து தணிந்தது காடு தழல் வீரத்தில் குஞ்சென்றும், மூப்பென்றும் உண்டோ?" என்பார். அதுபோல் இந்தப் புரிதல் நமக்குள் சிறியதாக நுழைந்து நம்முடைய பதிவுகள், ஜன்மாந்திர கர்மாக்கள் என அனைத்தையும் எரித்து சாம்பல் ஆக்கி இறுதியாக புரிதல் ஒன்று மட்டுமே நிற்கிறது.

நண்பர் : நிச்சயமாக, நிச்சயமாக.

சர : மேலும் ஒரு வாரம் கழித்து நண்பரை போனில் தொடர்பு கொண்டேன்.

நண்பர் : இப்போது முன்பு போல் வெறுமை இருப்பதில்லை. அப்படி இருந்தாலும் இருந்துவிட்டு போகட்டும் என்று விட்டுவிட்டு என்னுடைய வேலையை மட்டும் பார்க்கிறேன்.

சர : ரொம்ப நல்லது... நம் கைவசம் இருப்பது அது மட்டுமே.

நண்பர் : ரொம்ப சரியாக சொன்னீங்க... ரொம்ப ரொம்ப நன்றி....